# பகவத் பாதை

## BAGAVATH PATHAI

தமிழ் மாத இதழ்

•Volume : 2 • Issue: 12 • February 2016 • Annual Subcription Rs. 100/- • மலர் 2 • இதழ்: 12 • பிப்ரவரி 2016 • வருடச் சந்தா ரூ. 100/-




## சிஜ்ஜட கிரந்தி

# பகவத் பாதை

தமிழ் மாத இதழ்

## உள்ளே





" நமக்கு ஏற்படும் எந்த அனுபவங்களையும் சீரமைக்கத் தேவையில்லை. அவை இயற்கையானவை-பிரம்ம சொரூபமானவை. நமது அனுபவங்களின் செய்தி அம்சங்கள் யாவும் செயற்கையானவை. நமது சூழ்நிலையை நிர்வாகம் செய்வதற்காக ஏற்பட்டவை.

– ஸ்ரீ பகவத்

கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? அல்லது பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?





31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu,INDIA.

**V. A. P. Sharavanan : 99942 05880**
**Dr. N. Kailasam : 94432 90559**
**K. S. Jeevamani : 97891 65555**

www.pravaagam.org, www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com






This Book Designed By:
**ORANGE DESIGNER SALEM**
Mobile : 9894377433





## FORM IV

| | | |
|---|---|---|
| Place of publication | : | Salem |
| Periodicity of its publication | : | Monthly |
| Printer's Name | : | R.Jayavel |
| Nationality | : | Indian |
| Address | : | Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapet, Salem-636003. |
| Publisher's Name | : | V.A.P. Sharavanan |
| Nationality | : | Indian |
| Address | : | 28, Ramalinga Samy Street, Ammapet, Salem-636003. |
| Editor's Name | : | K. S. Jeevamani |
| Nationality | : | Indian |
| Address | : | 31, Ramalinga Samy Street, Ammapet, Salem-636003. |
| Names and address of individuals who own the newspaper and partners or shareholders holding More than one percent of the total capital. | : | **Sri Bagavath Mission, 31, Ramalingasamystreet, Ammapettai, Salem – 636003.** |

I **V.A.P. SHARAVANAN,** Sri Bagavath Mission 31, Ramalingasamy Street, Ammapet, Salem - 3 hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Date: 10.02.2016

**V.A.P. Sharavanan**

# சிஜ்ஜட கிரந்தி



ஆன்மா, ஆன்மிகம் என்ற பெயர்கள் நமக்கு மிகவும் பிடித்துள்ளன.

ஆன்மா என்றால் என்ன என்பது குறித்து நாம் பல விளக்கங்களைத் தெரிந்து கொண்ட பின்பும் கூட, அது பற்றிய நமது கேள்விகள் குறையவில்லை.

சமீபத்தில் அது சம்பந்தமாக நடந்த கலந்துரையாடல், இந்தக் கட்டுரையாக வெளிவருகிறது.

ஆன்மா என்பது என்ன?

ஆன்மாவை அறிவு அம்சம், சித் அம்சம், Awareness, பிரக்ஞை, துரிய நிலை, சாட்சி நிலை என பலவிதமான வார்த்தைகளில் விளக்குகின்றனர்.

இதனை சைதன்யம் என்ற பெயரிலும் கூட விவரிக்கின்றனர்.

பெயர்கள் பலவாக இருந்தாலும், இவை அனைத்தும் ஆன்மாவையே குறிக்கின்றன.

வெளிச்சம் எதுவும் இல்லாமல் இருளாக இருக்கும் ஓர் அறையினுள் பலவிதமான பொருட்கள் உள்ளன. இருளாக இருப்பதால் அவை எவையும் நமது கண்களுக்குத் தெரியவில்லை.

மெழுகுவர்த்தி ஒன்றை ஏற்றுகின்றோம்.

மெழுகுவர்த்தியின் வெளிச்சத்தில் அறையிலிருக்கும் பொருட்கள் யாவும் புலப்படுகின்றன. மேஜையைப் பார்க்க முடிகின்றது. மேஜை மேலிருக்கும் புத்தகங்களைப் பார்க்க முடிகின்றது.

இவை அனைத்தையும் மெழுகுவர்த்தியின் ஒளியைக் கொண்டே பார்க்க முடிகிறது.

மேஜையைப் பார்ப்பதற்கு மெழுகுவர்த்தி தேவைப்படுகிறது.

மெழுகுவர்த்தியின் உதவி இல்லாமல் மேஜையைப் பார்க்க முடியாது.

மேஜையைப் பார்ப்பதற்கு ஒரு மெழுகுவர்த்தி தேவைப்படலாம்.

ஆனால் அந்த மெழுகுவர்த்தியைப் பார்ப்பதற்கு என்ன செய்ய வேண்டும்?

மேஜையைப் பார்ப்பதற்கு ஒரு மெழுகுவர்த்தியைக் கொண்டு வந்தது போல்,

இந்த மெழுகுவர்த்தியைப் பார்ப்பதற்கும் இன்னொரு மெழுகுவர்த்தியைக் கொண்டு வரவேண்டுமா?

தேவையில்லை. ஏனெனில் மெழுகுவர்த்தி சுய ஒளி உடையது. அது தன்னுடைய ஒளியினால் தன்னையே வெளிப்படுத்திக் காட்டிக் கொள்ளும்.

இப்படிச் சுய ஒளி உடையதை, ஆன்மா அல்லது சைதன்யம் என்று கூறுகிறோம்.

சுய ஒளி இல்லாததை ஜடம் அல்லது ஜடப்பொருள் என்று கூறுகிறோம்.

நாம் பலவற்றோடு தொடர்பு கொண்டுள்ளோம். இவற்றுள் எவையெல்லாம் தம்மைத் தாமே வெளிப்படுத்திக் காட்டுகின்றன?

நாம் நடக்கும் போது கால் இடறிக் கீழே விழுந்து காலில் அடிப்பட்டுக் காயம் ஏற்பட்டு விடுகிறது. அந்த காயத்தில் வலி இருந்து கொண்டிருக்கிறது.

அந்த வலியை எப்படி அறிவது?

விளக்கின் ஒளியைக் கொண்டு அறிவதா?

விளக்கின் ஒளி தேவையில்லை.

அந்த வலியே, தன்னை வெளிப்படுத்திக் காட்டிக் கொள்ளும்.

அது தன்னையே அறிவித்துக் கொள்ளும். தன்னையே அறிவித்து தன்னையே அறிந்து கொள்ளும்.

ஒருவர் தனக்குக் கவலையாக இருக்கிறது என்று கூறுகிறார். இன்னுமொருவர் தனக்கு பயமாக இருக்கிறது என்று கூறுகிறார்.

அவர்களுக்கு ஏற்பட்ட பயம் மற்றும் வருத்தமான உணர்ச்சிகளை வெளிச்சத்தின் உதவி கொண்டு அறிய முடியுமா?

வெளிச்சத்தின் மூலமாக இவற்றை அறிய முடியாது.

ஆனால் நமக்கு ஏற்படும் பயம் மற்றும் வருத்தமான உணர்ச்சிகள் யாவும் உண்மையானவை; உயிருள்ளவை.

அவை யாவும் தம்முடைய இருப்புத் தன்மையை தாமே விளக்கிக் காட்டும் தகுதியுடையவை.

நம்முடைய உடல் உணர்ச்சியாகவும் (Bodily Consciousness), மன உணர்ச்சியாகவும்–Emotions (Psychological consciousness) ஆகச் செயல்படுவது

நம்முடைய ஆன்மாவே-சைதன்யமே-சித் அம்சமே.

அடித்தளமாக இருப்பது இந்த சித் அம்சமேயாகும் -Awareness ஆகும்.

இந்த சித்அம்சத்தின்–உணர்வின்–Awareness ன் வெளிப்பாடுதான் உணர்ச்சிகள் ஆகும்.

–Consciousness ஆகும்.

Consciousness - உணர்ச்சி என்பது ஒரு தனிப்பட்ட தன்மையுடையது.

Awareness - உணர்வு என்பது அப்படி எந்த விதமான தனிப்பட்ட தன்மையும் இல்லாதது.

Awareness - உணர்வு என்பது ஆதாரமானது. அந்த ஆதாரத்திலிருந்து வெளிப்பட்ட உணர்ச்சி தான் Consciousness ஆகும்.

உணர்ச்சிகள் பலப்பல தன்மையோடு அமைந்துள்ளன. உடலில் ஏற்படும் உணர்ச்சிகள், குளிர், வெப்பம், வலி, சுகம் என பலவிதமான தன்மைகளில் அமைந்துள்ளன.

இதுபோல் மன உணர்ச்சிகளும் மகிழ்ச்சி, வருத்தம், கோபம், விருப்பு, வெறுப்பு என பலவிதமான தன்மைகளில் அமைந்துள்ளன.

Awareness - உணர்வு என்பது பல அல்ல. அது ஒன்றே ஒன்று தான். Consciousness பலவாக இருந்தாலும் அவை யாவும் அடிப்படையில் ஒன்றே ஒன்று தான்.

அடிப்படையில் நமது உணர்ச்சிகள் யாவும் சித் அம்சமாக உள்ளன. ஆனால் அதன் வெளிப்பாட்டில் மட்டும் சித் அல்லாத அசத் அம்சமாக உள்ளன.

நமக்கு எத்தனையோ நினைவுகள் – Thoughts ஏற்படுகின்றன. நினைவு என்பது என்ன?

நமது நண்பரைப் பற்றிய நினைவு ஏற்படுவதாக வைத்துக்கொள்வோம்.

நமக்கு முன்பாக நமது நண்பர் இல்லை.

நினைவின் மூலமாகத் தான் அவரை எண்ணிக் கொள்கிறோம். நமக்கு எதிரில் இல்லாத ஒருவரை கற்பனையாக எண்ணிக் கொள்கிறோம்.

நமது நண்பரைப் பற்றிய செய்திகள் அனைத்தும் நமது Memory யில் நினைவுக் குறிப்புகளில் பதிவாகி உள்ளன.

அந்தப் பதிவுகளிலிருந்து தான், நினைவுகளாக வெளிப்படுகின்றன.

நடந்து முடிந்தவைகள் தாம் இப்படி மெமரியாகப் பதிவாகின்றன. அந்தப் பதிவுகள் அனைத்தும் இறந்து போனவைகளே.

–நடந்து முடிந்து விட்ட சாம்பல்களே.

–உயிரற்றவையே.

–இல்லாதவைகளே.

–ஜட அம்சமானவைகளே.

–அசத்தாக உள்ளவையே.

ஆனால் அவற்றின் உதவியுடன் தான் சிந்தனைகள் வெளிப்படுகின்றன.

நமக்கு ஏற்படும் சிந்தனை என்பது இல்லாத ஒன்றா, அல்லது இருப்புத்தன்மையுடைய ஒன்றா?

நமக்கு ஏற்படும் சிந்தனை இருப்புத் தன்மையுடையது. அது இருப்பதை அதுவே வெளிப்படுத்திக்காட்டுகிறது.

சிந்தனை என்பது சித் அம்சமுடையது.

–இருப்புத் தன்மையடையது.

–சத் அம்சமுடையது.

ஆனால் அதில் உள்ள செய்திகள் யாவும் இல்லாதவையாகும்.

–முடிந்து போன பழைய நினைவுக் குறிப்புகளாகும்.

உணர்வு என்பது இருப்புத் தன்மையுடையது. பதிவு (Memory) என்பது இல்லாத ஒன்று.

இரண்டும் கலந்த நிலையில் அது Thought என்னும் சிந்தனையாக அமைகிறது.

Thought என்பது இருப்புத் தன்மையுடையது. அதிலுள்ள செய்திகள் யாவும் ஜடமான நினைவுக் குறிப்புகள்-பதிவு (Memory) மட்டுமே ஆகும்.

சித் அம்சமும், ஜட அம்சமும் இணைந்த இணைப்புதான் நமது நினைவுகளாகும்.

-நமது Thought களாகும்.

இந்த இணைப்பை கிரந்தி அல்லது முடிச்சு என்று கூறுவார்கள்.

சித்தும் ஜடமும் இணைந்த முடிச்சு தான் -கிரந்தி தான் சித் ஜட கிரந்தி அல்லது சிஜ்ஜட கிரந்தி என்று அழைக்கப்படுகிறது.

நமது நினைவுகள் எவையும் உணர்வல்ல.

-Awareness அல்ல.

அவை அனைத்தும் Awareness லிருந்து வெளிப்பட்ட Consciousness ஆகும் - உணர்ச்சிகள் ஆகும்.

நமது Consciousness அனைத்தும் சிஜ்ஜட கிரந்தியே ஆகும்.

நமக்குப் புலப்படுவது அனைத்தும் Consciousness மட்டுமே.

-சிஜ்ஜட கிரந்தி மட்டுமே.

நமக்கு மன அனுபவங்கள் பலவும், உடல் அனுபவங்கள் பலவும் ஏற்படுகின்றன.

அத்தனை அனுபவங்களும் Consciousness மட்டுமே.

-சிஜ்ஜட கிரந்தி மட்டுமே.

மனம் என்னும் ஜடமும், சித் அம்சமும் இணைந்த சிஜ்ஜட கிரந்தியே மனோ அனுபவங்களாக வெளிப்படுகின்றன.

இதுபோல் உடல் என்னும் ஜடமும், சித் அம்சமும் இணைந்த சிஜ்ஜட கிரந்தியே உடல் அனுபவங்களாக

-உணர்ச்சிகளாக வெளிப்படுகின்றன.

இந்த கிரந்திகள் அனைத்தும் தன்னை வெளிப்படுத்திக்காட்டும் Consciousness ஆக அமைந்திருந்தாலும் இது முழுமையான சித் அம்சம் மட்டுமல்ல.

இவை அனைத்தும் வெளிப்பட்டவை.

-நிரந்தரமற்றவை.

-நொடிப்பொழுது மட்டுமே நிலைத்திருப்பவை.

-தோன்றி மறையக்கூடியவை.

-ஆனாலும் சித் அம்சமானவை.

-சித் அம்சத்தை ஆதாரமாகக் கொண்டவை.

ஒவ்வொரு அனுபவத்திலும் - சிஜ்ஜட கிரந்தியிலும் உள்ள அக அம்சம் சித்தாக உள்ளது.

-ஆன்மாவாக உள்ளது.

-பிரம்மமாக உள்ளது.

அதன் புற அம்சம் மட்டும் வெளிப்பட்டவையாக உள்ளது.

அனுபவமாக உள்ளது.

-செய்தியாக உள்ளது.

-நிகழ்வாக உள்ளது.

ஜகமாக உள்ளது; உலகமாக உள்ளது. அகம் பிரம்மமாகவும், புறம் ஜகமாகவும் உள்ளது.

ஒவ்வொரு அனுபவத்தையும் அகத்தளவில் பாரமார்த்திய சத்தியமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

-இயற்கை என எடுத்துக் கொள்ள வேண்டும்.

அதன் புற அம்சத்தை மட்டும் வியவ காரிய சத்தியமாக எடுத்துக் கொள்ள வேண்டும்.

நமக்கு ஏற்படும் எந்த அனுபவங்களையும் சீரமைக்கத் தேவையில்லை.

அவை இயற்கையானவை - பிரம்ம சொரூபமானவை.

நமது அனுபவங்களின் செய்தி அம்சங்கள் யாவும் செயற்கையானவை.

நமது சூழ்நிலையை நிர்வாகம் செய்வதற்காக ஏற்பட்டவை.

அவற்றை பயன்படுத்தி உலக நிகழ்வுகளை ஒழுங்குபடுத்தலாம்.

நமது செயல்களை ஒழுங்குபடுத்தலாம்.

நமது அனுபவங்கள் அனைத்தும் - சிஜ்ஜட கிரந்திகள் அனைத்தும் அவற்றளவில் பிரம்மமாகவே உள்ளன.

அவற்றில் குறை காண வேண்டாம்.

அகம் பிரம்மமாகவே உள்ளது.

அகம் பிரம்மாஸ்மி.



## ஹைதராபாத்தில் ஐயாவின் நிகழ்ச்சிகள்

| நாள் | தலைப்பு | இடம் |
|---|---|---|
| 27.02.2016 சனிக்கிழமை<br>மாலை 6:00pm to 8:00pm | **Self Realization (English)** | Telengana Saraswatha, Parishad,<br>Tilak Road, Hydrabad-1. **Ph: 09010010347** |
| 28.02.2016 ஞாயிற்றுக்கிழமை<br>காலை 10:00 am to 12:00 noon | **Self Realization (English)** | Vasavi Club, 2nd Floor, Opp. Sensation Theatre,<br>Khairatabad, Lakdi ka Pool, Hydrabad-4.<br>**Ph: 09010010347** |
| 28.02.2016 ஞாயிற்றுக்கிழமை<br>மாலை 6:00 pm to 8:00 pm | **எல்லாக் கவலைகளுக்கும் ஞானமே தீர்வு** | **தமிழ் சங்கம்,**<br>செகன்தராபாத், **Ph: 09010010347** |

Entry Free



# “கனவும், தெளிவும்”

V.A.P. சரவணன் (சேலம்)
செல் : 99942 05880

ஒரு பெண்மணி தன் வாழ்க்கையில் சந்தித்த நிகழ்வுகளும் அதனால் அவருக்கு ஏற்பட்ட மனப்பாதிப்பும், புரிதலினால் அவருக்கு ஏற்பட்ட தெளிவும் பலருக்கு உதவும் என்ற அடிப்படையில் இங்கு பகிர்கின்றேன். இனி அந்த பெண்மணி....

நான் ஒரு 45 வயது ஆன பெண்மணி. எனக்கு, கணவர் மற்றும் ஒரு மகனும், ஒரு மகளும் உண்டு.

என்னுடைய சிறு வயதில் கனவு பயம் அதிகம். இரவு தூங்கும் போது கனவில் முரட்டு ஆள் ஒருவன்: தலப்பாக் கட்டிக் கொண்டு கொடுவாள், கத்தி, கம்பு, கொண்டு என்னை தாக்குவது போல் அடிக்கடி கனவு வரும். இந்தக் கனவு எனக்குப் பிடிக்காது, அதனால் இரவு தூக்கம் என்றாலே பயம் தான் ஏற்படும். என்னுடைய சகோதரிகள் இருவர் உடல்நலக் குறைவுக்குப் பல மருத்துவம் பார்த்தும் எதுவும் சரியாகவில்லை. அதற்கு ஏதோ தீய சக்திகள்தான் காரணம் என்பார்கள். அவர்கள் பிழைப்பதற்கு எந்த வழியும் கிடையாது கடவுள் உதவினால் தான் உண்டு என்பார்கள். பிறகு ஒருவழியாக இருவரும் நோயிலிருந்து மீண்டு விட்டார்கள். இப்படி நிறையச் சம்பவங்கள் என்னை மிகவும் பாதித்தன.

பிறகு நான் திருமணம் செய்து கொண்டு புகுந்த வீட்டிற்கு வந்துவிட்டேன். எனது புகுந்த வீடு பெரிய கூட்டுக் குடும்பம். அதில் ஏகப்பட்ட பிரச்சினைகளை சந்தித்தேன். நிம்மதி இன்றித் தவித்தேன். ஒரு வழியாக ஒரு வீடு கட்டி கணவருடன் தனியாக வந்துவிட்டேன். இந்த வீட்டிற்கு வந்ததில் இருந்து நிம்மதியே இல்லை. எப்போது பார்த்தாலும் ஏதாவது உடல் தொந்தரவு,மனதில் சதா கொடூரமான கனவுகள் என என்னால் தாங்கவே முடியவில்லை. இதனால் இரவு ஆனாலே பயம் ஏற்படத் தொடங்கியது. ஏதோ ஒரு துன்பம் எனக்கோ எனது கணவருக்கோ எனது குழந்தைகளுக்கோ நிச்சயம் ஏற்படும் என்று மனம் சதா பயப்படும்.

இந்த நிலையில் வீட்டிற்குப் பக்கத்தில் உள்ள பெரியவர்கள் பூசாரியிடம் குறிகேட்கச் சொன்னார்கள். அந்தக் குறிசொல்பவர் எனது புகுந்த வீட்டில் உள்ளவர்கள் தான் எனக்கும், எனது குடும்பத்திற்கும் செய்வினை வைத்துவிட்டார்கள் என்று கூறினார். வீட்டிற்குப் பின்புறம் இருக்கும் பாம்பு புற்று துஷ்ட தேவதை வசிக்கும் இடம் அதனால் தான் அவைகள் உன்னைத் தாக்குகின்றன. அதனால் தான் படாதபாடு படுகிறாய் என்று கூறினார். மேலும் பழனிக்குச் சென்று இரண்டு பொய்கைகளான சண்முக நதி, சரவணப் பொய்கை இரண்டிலும் குளித்து முருகனைத் தரிசனம் செய்தால் சரியாகும் என்றார். அப்படியே குடும்பத்தோடு பழனி சென்று வந்தோம். பிறகு ஸ்ரீரங்கமும் சென்றோம் அதன் பிறகு துஷ்ட தேவதைகள் பாதிப்பு என்பதால் காளி கோயில்களுக்குச் சென்று வந்தோம். கிட்டதட்ட 20 ஆண்டுகளாக இப்படியே இந்த பயத்திற்காகவே எல்லாக் கோயில்களுக்கும் போய் வந்துவிட்டோம். ஏசுநாதரை பிரார்த்தனை செய்தால் எல்லாம் மாறும் என்றார்கள், நானும் முயற்சி செய்து பார்த்தேன், எதுவும் மாறவில்லை.

ஒருமுறை விநாயகருக்கு 48 நாள் தண்ணீர் ஊற்றிவிளக்கு வைத்து இந்த பயத்திற்காகக் கும்பிட்டேன். 48 நாட்கள் முடிந்த நிலையில் சாமியிடம், “நான் பைத்தியகாரி மாதிரி உன்னிடம் கூறிக்கொண்டே இருக்கிறேன், நீ செவிடன் காதில் ஊதின சங்கு மாதிரியே இருந்தால் எப்படி” என்று புலம்பினேன். தினமும் பூஜை அறையில் காலை தலைக்குத் தண்ணீர் ஊற்றிக்கொண்டு ஒரு மணிநேரம் கந்த சஷ்டி கவசம், ஈஸ்வர மாலை மற்றும் எல்லா தெய்வங்களுக்கான எல்லா மந்திரங்களையும் படிப்பேன். வாய் மட்டும் தான் மந்திரம் சொல்லும் மனம் அந்தப் பயத்திலேயே தான் இருக்கும். வெள்ளிக்கிழமை என்றால், முதல் நாள் இரவு முதலே அதீத பயம் ஏற்பட்டு விடும்.

இப்படி நாட்கள் செல்லச் செல்ல வீட்டில் நான் மட்டும் தனியாக இருக்கும் போது ஜன்னல் தானாக அடித்துக் கொண்டு இருப்பது போல் தோன்றும். வீட்டில் பின்புறக் கதவிற்கு பின் யாரோ இருந்து கொண்டு தொந்தரவு கொடுப்பது போல் தோன்றும். கொஞ்ச நேரம் கூட நிம்மதியாக இருக்க விடாமல் பயம் என்னைப் கடும் பாடுபடுத்தும். நான் ஏதாவது புதுப்புடவை கட்டிக் கொண்டு கோவிலுக்குச் செல்லும் போது ஏதாவது பூனை குறுக்கில் சென்றாலோ, நான் சாமி கும்பிடும்போது யாராவது தும்பினாலோ அவ்வளவு தான் இனி மேல் இந்தப் புடவையைக் கட்டக் கூடாது என்று எடுத்து வைத்து விடுவேன். இப்படிக் கிட்டதட்ட 30க்கும் மேற்பட்ட புதுப் புடவைகள் கட்டாமலேயே உள்ளன. பழைய புடவைகளை திரும்பத் திரும்ப கட்டிவருவேன். மதியம் சமையலுக்கு தேவையான காய்கறிகளை வாங்கி வருவார் கணவர். நான் காய்கறிகளை அரியத் தொடங்கியவுடன் அந்தப் பயம் என்னை ஆட்கொள்ளத் தொடங்கும். அந்த நேரம் பார்த்து யாராவது இறப்புச் செய்தியை கூறினால் அதோடு சரி, அந்த காய்கள் அனைத்தையும் எறிந்து விடுவேன். மேலும் அந்தக் காய்களை திரும்ப சமையலுக்கு எப்போதும் பயன்படுத்த மாட்டேன். இப்படித் திரும்பவும் அந்தக் காய்கறிகளை சமையலுக்குப் பயன்படுத்தாமல் இருப்பது சரியல்ல என்று தோன்றினாலும் கூட என்னால் மீண்டும் அந்தக் காய்கறிகளை சமைக்க முடியாது.

என்னுடைய உறவினர்கள் 4 பேர் வரிசையாக ஒரு 6 மாதங்களில் இறந்தனர். இனி அடுத்து நாம் தான் என்று எண்ணிக்கொள்வேன். கடவுளிடம் என்னைக்கூட எடுத்துக்கொள் என்னுடைய கணவரையோ, பிள்ளைகளையோ எதுவும்

செய்துவிடாதே என்று பலமுறை வேண்டிக் கொள்வேன்.

என்னுடைய நிலைமையை யாரும் புரிந்துகொள்ள மாட்டார்கள். “நீ தேவையில்லாமல் சிந்தித்துக் கொண்டு குழம்பிக் கொள்கிறாய். தேவையில்லாமல் பயப்படுகிறாய் கண்டதையும் எண்ணிக் கொள்கிறாய்” என்று என்னை ஒரு பைத்தியகாரியை பார்ப்பது போல் பார்ப்பார்கள். எனக்கு எந்த ஒரு வழியும் தெரியாது. அவர்கள் கூறுவதை கேட்டுக்கொள்வதோடு சரி வேறு ஒன்றும் செய்ய முடியாமலும் வழி தெரியாமலும் தவிப்பேன்.

கிட்டத்தட்ட 20 ஆண்டுகளாக இந்தப் பயத்திற்காக எல்லாவிதமான கோயில்களுக்கும் சென்று திரும்பினேன். ஒரு நாள் கனவில் ஒரு அம்மன் சாமி தோன்றியது, பிறகு அந்த அம்மன் கோவிலுக்கு மாலை அணிந்து சென்று 200 ரூபாய் உண்டியலில் போட்டுவிட்டு, சாமியிடம் கூறினேன், “ஒன்று என்னைப் பயமின்றி நிம்மதியாக வாழ வை அல்லது என்னை ஒரே அடியாக முடித்து விடு என்னால் முடியவில்லை.” என்று கண்ணீர் விட்டுக் கதறினேன். “இனிமேல் எப்போதும் பிறவி என்பது இருக்கவே கூடாது. ஒரு கல்லாய் மண்ணாய் கூட பிறக்கக் கூடாது” என்று என்னைப் பிறவித் துன்பத்திலிருந்து மீட்டு எடு என்று கதறி அழுதேன்.

“இந்த நிலையில் எனது உறவினர் பெண்ணின் மகள் ஒருவர் தனக்கு ஏற்பட்ட பயத்தை பகவத் ஐயாவின் நூல்கள், பகவத்பாதை படித்தும், உங்களோடு பேசியும் தெளிவு பெற்றதாகவும் கூறினார்கள். எனவே எனக்கும் தெளிவை கொடுங்கள், என் பயத்தையும் போக்கி எனக்கு நிம்மதியைக் கொடுங்கள்” என்று கிட்டதட்ட ஒன்றரை மணிநேரம் தன்னுடைய நிலைமையை எடுத்துக் கூறி கேட்டார்.

நான் எல்லாவற்றையும் பொறுமையாகக் கேட்டுக் கொண்ட பிறகு பிப்ரவரி 2014 இதழில் வெளியான “வெறுமையும் வேலையும்”, ஆகஸ்ட் 2014 இதழில் வெளியான “பயமும் விடுதலையும்”, மற்றும் “நினைவும் சிந்தனையும்”, கட்டுரைகளை அனுப்பி வைத்து நேரம் கிடைக்கும் போதெல்லாம் திரும்பத் திரும்பப் படித்து வாருங்கள் என்று கூறினேன். மேலும் நாம் வழக்கமாக கூறும் உதாரணமான ஒரு கண்ணாடி டம்ளர், அதில் கொஞ்சம் மணல், தண்ணீர் ஊற்றிக் கொண்டு, ஸ்பூன் போட்டு கலக்குங்கள், இந்தப் தயாரிப்பை வைத்துக் கொள்ளுங்கள். இனிமேல் மனதில் ஏற்படும் பயத்திற்காக எந்தக் கோயிலுக்கும் போகக் கூடாது, எந்த மந்திரமும் படிக்கக் கூடாது, பூஜை ரூமில் 2 நிமிடத்திற்கு மேல் சாமி கும்பிடக்கூடாது என்று கூறினேன்.

இனிமேல் உங்களுக்கு இந்த கண்ணாடி டம்ளர்தான் குரு. உங்களுக்கு எப்போதெல்லாம் பயம் ஏற்படுகிறதோ அப்போதெல்லாம் கண்ணாடி டம்ளரை ஸ்பூன் போட்டு ஒரு கலக்கு கலக்குங்கள். பிறகு கையை மட்டும் எடுத்து விட்டு கவனியுங்கள், ஸ்பூன் ஓரமாக நிற்கும். தண்ணீர் சுழற்சி மெல்லக் குறைந்து நிற்கும். மணல் டம்ளர் அடியில் படியும், தண்ணீர் தெளியும். தண்ணீர் தெளிவதற்கு நாமாக கலக்காமல் இருந்தால் மட்டும் போதும். அது போல் உங்கள் மனதில் ஏற்படும் பயத்திற்கு நீங்களாக எந்த முயற்சியும் செய்யாமல் விடும் போது பயம் உங்களை விட்டு தன்னாலே மறையும். தண்ணீர் தெளிவதற்கு எதுவும் செய்யத் தேவையில்லை என்பது எப்படியோ அப்படியே உங்கள் மனதில் ஏற்படும் பயத்தை போக்குவதற்கு நீங்களாக எதுவும் செய்யத்தேவையில்லை, என்று கூறினேன். 3 நாட்களுக்கு ஒரு முறை போனில் தொடர்பு கொண்டு உங்கள் நிலையைத் தெரியப்படுத்துங்கள் என்று கூறினேன்.

அந்தப் பெண்மணி டம்ளர் உதாரணத்தைப் பயம் ஏற்படும் போது எல்லாம் கலக்கிக் கலக்கித் தெளிவடைவதைப் பார்த்தார். காலை, மாலை இரு வேளையும், மூன்று பகவத் பாதைகளையும் படித்தார். ஒரு 10 முதல் 15 நாட்களிலேயே எடுத்து கட்டாமல் வைத்திருந்த புடவைகளைப் பாதிக்கு மேல் கட்டி விட்டதாகவும், காய்கறிகளை இப்போது எல்லாம் தூக்கி எறியாமல் சமைப்பதாகவும் பல நாட்களாக சமைக்காமல் விட்ட காய்கறிகளை எல்லாம் கூட இப்போது சமைப்பதாகவும் கூறினார். தான் முன்பை விட இப்போது எவ்வளவோ நன்றாக இருப்பதாகக் கூறினார். எப்படியும் நான் வெகு விரைவில் முழுவதுமாக மாறிவிடுவேன் என்ற நம்பிக்கை என்னுள் ஏற்பட்டுள்ளது என்று கூறினார்.

மேலும் “என்னை போல் பல பெண்கள் பயத்தை எதிர்கொள்ளத் தெரியாமல் பைத்தியகாரிகள் போல் மனநிலை பாதிக்கப்பட்டுள்ளார்கள். எனவே என்னுடைய நிலையையும் நான் தெளிவடைந்த விதத்தையும் பகவத் பாதையில் வெளியிட்டு பாதிக்கப்பட்ட பலரையும் மீட்க உதவுங்கள்.” என்றும் கூறினார்.

இந்தப் பெண்மணியின் பாதிப்புக்கான காரணம் தனக்கு ஏற்பட்ட பயத்தை எப்படியாவது போக்க வேண்டும் என்று எடுத்த அத்தனை முயற்சிகளுமே தான். தனக்கு ஏற்பட்ட பயத்தை நீக்குவதற்காக இறை மந்திரங்களைச் சொன்னது, கோயில் கோயிலாக சென்றது என அனைத்துமே பயத்திற்கே வலிமை சேர்ந்துள்ளன. இறைவனை நாடி பயத்தை போக்கிக் கொள்ள எடுத்த முயற்சிகள் கூட அந்தப் பயத்திற்கு தீனிபோடும் செயலே. புதிய புடவைகளைக் கட்டாமல் இருப்பது, காய்கறிகளை தூக்கி எறிவது என அனைத்துமே அந்த பயத்தை எதிர்கொள்ளத் தெரியாமல் செய்த செயலே. மனதை ஒன்றும் செய்ய முடியாது என்பதை புரிந்த கணத்திலிருந்து பயத்தின் வீரியம் குறையத் தொடங்கியது. 20 வருட தவறான அணுகுமுறைக் கூட பகவத் ஐயாவின் மனதை பற்றிய புதிய அணுகுமுறையால் 2 வாரத்தில் மாறியிருக்கிறது என்பதே உண்மை. இன்றைய சமுதாயத்தில் பலரும் இப்படி ஏதேதோ மனப்பிரச்சனைகளில் சிக்கித்தவிக்கிறார்கள். அதற்கு எல்லாம் பகவத் ஐயாவின் மனதை பற்றிய அணுகுமுறை ஒன்றே தீர்வு. *





# ஆசிரியர் பகுதி

K.S. ஜீவமணி
செல் : 97891-65555

அனைவருக்கும் இந்தச் சக பயணியின் வணக்கம்,

பகவத் பாதையில் நமது பயணத்தின் மிக முக்கியமான நிழ்ச்சியான நமது ஸ்ரீ பகவத் பவனின் புதுமனை புகுவிழா நாம் திட்டமிட்ட படி மிகச் சிறப்பாக நடைபெற்றது. இயற்கையின் திட்டமும் நம் திட்டமும் ஒன்றாக அமையும் போது அந்த நிகழ்வு சிறப்பாக அமைவதில் ஐயமில்லை.

நமது ஞான இல்லத்தின் புதுமனை புகுவிழாவிற்கு வருகை புரிந்து சிறப்பாக நடத்திக் கொடுத்த அனைத்து அன்பர்களுக்கும் மேலும் பகவத் பவனின் உருவாக்கத்திற்கு பங்களித்த அனைத்து நல் உள்ளங்களுக்கும் நன்றிகளை உரித்தாக்குகிறோம்.

மேலும் இவ்விழாவிற்கு ஆத்ம ஞானி தேனி சுவாமி அவர்கள் ஒருநாள் முன்னதாகவே வந்திருந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்களுடன் தங்கியிருந்து 20.01.2016 காலை 11 மணிக்கு நமது ஸ்ரீ பகவத் பவன் இல்லத்தை இருவருமாக இணைந்து திறந்து வைத்தனர். இவர்களுடன் சுவாமி சொரூபானந்தா அவர்களும் கலந்து கொண்டார்.

திறப்பு விழாவைத் தொடர்ந்து தேனி சுவாமிகளும் சொரூபானந்தா சுவாமிகளும் வாழ்த்துரை வழங்கினர். இவர்களைத் தொடர்ந்து ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் சிறப்புரை ஆற்றினார்கள்.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் தன் உரையின் போது "ஸ்ரீ பகவத் பவன் நம் அனைவருக்கும் கெஸ்ட் ஹவுஸ் (Guest House) போன்றது, நீங்கள் அனைவரும் ஓய்வு நாட்களில் வந்து தங்கிச் செல்லும் இடமாக அமையும்" என்று கூறினார்கள்.

மேலும், "விடுதியில் தங்கிப் படிக்கும் கல்லூரி மாணவ, மாணவிகள் விடுமுறை நாட்களில் எப்படித் தன் தாய்வீட்டிற்கு வருவார்களோ, அப்படி உங்கள் வேலை விடுமுறை நாட்களிலும், ஓய்வு நாட்களிலும் இங்கு வந்து ஓய்வெடுத்துச் செல்லலாம், மேலும் வீட்டிற்கு வரும் போது நண்பர்களை அழைத்து வருவதைப் போன்று ஞானம் பெற தகுதியான உங்கள் நண்பர்களையும் அழைத்து வாருங்கள்" என்று கூறினார்.

ஐயாவின் உரை அனவருக்கும் மகிழ்ச்சியையும், நிறைவையும் கொடுத்தது.

இவ்விழாவில் "ஞான விடுதலை" மற்றும் "நான் யார்?" என்ற இரண்டு நூல்களையும்' தெலுங்கில் மொழி மாற்றம் செய்யப்பட்ட நூல்கள் மற்றும் ஐயாவின் கருத்துகளை கொண்ட 2016 ஆம் ஆண்டின் மாதக் காலண்டரும் வெளியிடப்பட்டது. இதனை ஸ்ரீ பகவத் ஐயா வெளியிட ஹீலர் உமர் பாரூக், சென்னை திருமதி. வில்லி அவர்கள் மற்றும் கரூர் சிவகுரு அவர்கள் பெற்றுக் கொண்டனர்.

அனைத்து ஊர்களிலிருந்து வந்திருந்த "ஸ்ரீ பகவத் மிஷன்" குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் ஒருவருக்கொருவர் நலம் விசாரித்து நட்புறவாடலாக இருந்து அங்குள்ள இயற்கைச் சூழலை இரசித்து சென்றனர்.

விழாவிற்கு வர முடியாத அன்பர்கள் இதனைத் தொடர்ந்த நாட்களில் வந்து ஐயாவைச் சந்தித்துப் பேசி பகவத் பவனைப் பார்வையிட்டு சென்றனர்.

அந்த வகையில் சென்னையைச் சேர்ந்த நமது அன்பர் டாக்டர். சாந்தி அவர்கள் தன் கணவருடன் வந்திருந்து ஐயாவுடன் உரையாடி பிறகு ஓய்வெடுத்து மதிய உணவு அருந்தி மகிழ்ச்சியாக சென்னை புறப்பட்டார். அப்போது அவர்களை வழி அனுப்ப வந்த பகவத் ஐயாவிடம், "ஐயா இங்கு வந்திருந்து உங்களிடம் பேசி ஓய்வெடுத்து பிறகு அனைவரும் ஒன்றாக அமர்ந்து உணவருந்தியதும், இங்கிருப்பவர்கள் நம்மை கவனித்துக் கொள்வதும் ஓர் இனம் புரியாத உணர்வை ஏற்படுத்துகிறது. என் அம்மா வீட்டிற்கு வந்து செல்லும் மகிழ்ச்சி தோன்றுகிறது. ஐயா..." என்று கூறியது நெகிழ்ச்சியாக இருந்தது.

ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் ஒரு வாரம் தங்கியிருந்து விட்டு சில வேலைகள் காரணமாக திருச்செந்தூர் சென்று பிறகு அங்கிருந்து சென்னை செல்ல இருக்கிறார்.

மீண்டும் மார்ச் மாதம் இறுதிக்குள் ஸ்ரீ பகவத் பவன் திரும்புவதாக இருக்கிறார்.

தற்போது ஸ்ரீ பகவத் பவனின் கீழ்த்தளம் முழுவதும் தங்குவதற்கு ஏதுவாக நிறைவு செய்யப்பட்டுள்ளது. பகவத் ஐயா அவர்கள் மீண்டும் திரும்பி வருவதற்குள் மீதியுள்ள முதல்தள வேலைகளையும் 2ம் தள வேலைகளையும் நிறைவு செய்து விட எண்ணி வேலைகள் சுறுசுறுப்பாக தொடங்கப்பட்டுள்ளன.

இவ்வேலைகளை முடித்து நிறைவு செய்த பின் ஞான முகாம் நடத்துவதற்கும் பலரும் வந்து தங்கிச் செல்லவும் ஏதுவாக அமைந்துவிடும்.

மீதி வேலைகளையும் நிறைவு செய்வதற்குத் தேவையான நிதி உதவியை வாய்ப்புள்ள அன்பர்கள் வழங்கி உதவுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

# ஸ்ரீ பகவத் பவன்




# வேண்டுகோள்

ஸ்ரீ பகவத் ஐயாவின் குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்,

நம் அனைவரது கூட்டு முயற்சியால் நமது ஞான இல்லமான "ஸ்ரீ பகவத் பவன்" ஆஸ்ரமத்தின் திறப்பு விழா 20.01.16 புதன்கிழமை காலை 11.00 மணிக்கு வெகு சிறப்பாக நடைபெற்றது. இவ்விழாவில் 300 முதல் 350 அன்பர்கள் கலந்து கொண்டனர்.

ஸ்ரீ பகவத் பவன் இல்லத்தை பகவத் ஐயா அவர்களும், தேனி ஸ்வாமி அவர்களும் சேர்ந்து திறந்து வைத்தனர். நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவரும் கைத்தட்டி கரகோஷம் எழுப்பி தங்களது மகிழ்ச்சியை தெரிவித்தனர். பிறகு பகவத் ஐயாவுடன், தேனிசுவாமிகளுடன் சேர்ந்து பலரும் புகைப்படம் எடுத்துக்கொண்டனர். பிறகு விழா மேடையில் தேனிசுவாமி, பகவத் ஐயா, சுவாமி சொருபனந்தா மூவரும் அமர்ந்து ஞான உரைகளை வழங்கினார்கள்.

பகவத் பவனுக்காக முழு ஈடுபாட்டுடன் பாடுபட்ட இன்ஜினியர் நந்தகுமார் அவர்களை "பகவத் பவனின் சிற்பி" என்று பாராட்டிக் குடும்பத்துடன் மேடைக்கு அழைத்து சால்வை போர்த்திக் கௌரவிக்கப்பட்டார். மேலும் பகவத் பாதை வடிவமைப்போர் மற்றும் அச்சிடுவோர், நமது பவனின் பாதுகாவலர் என அனைவரையும் ஸ்ரீ பகவத் மிஷன் சார்பாக சால்வை போர்த்தி பாராட்டப்பட்டனர்.

பல அன்பர்கள் ஸ்ரீ பகவத் பவனுக்கான தங்களுடைய பங்களிப்பை விழா மேடையில் வழங்கினார்கள். திண்டுக்கல்லை சேர்ந்த பட்டதாரி இளைஞர் ஒருவர் உடல் தகுதியின்மை காரணமாக அரசு வேலை நிராகரிக்கப்பட்டதால் சுய தொழிலாக டீ கடை வைத்து நடத்தி வருவதாகவும் அதில் தினமும் கொஞ்சம் கொஞ்சமாக காசுகளைச் சேர்த்து வைத்து சில்லரையாக ரூ.2500 ஐ ஒரு மஞ்சள் பையில் கொண்டு வந்து கொடுத்தார். இதை பார்த்துக் கொண்டு இருந்த பலரையும் கண் கலங்கச் செய்தது. ஐயாவின் இல்லத்திற்கு என்னால் இப்பொழுது இது தான் முடிந்தது. இன்னும் என்னால் என்ன தரமுடியுமோ அதை கண்டிப்பாக தருவேன் என்று கூறினார். இதற்கு நமது திரு. ஜீவமணி அவர்கள் எவ்வளவு பணம் என்பது முக்கியமல்ல கொடுக்க வேண்டும் என்ற மனமும் அதற்காக நீங்கள் தினமும் சேர்த்த காசும் தான் மிக உயர்ந்தது என்று அவரை மனதார பாராட்டினார்.

தற்போது கீழ்த் தளம் முழுவதுமாக வேலை முடிந்து பயன்பாட்டிற்கு வந்துள்ளது.பகவத் ஐயா ஒரு வாரம் தங்கி இருந்து திருச்செந்தூர் சென்றார். பகவத் ஐயா மிகவும் மகிழ்ச்சியாகவும், உற்சாகமாகவும் இருந்தார்.

இதுவரை வந்த நன்கொடைகளை வைத்து கீழ்த்தளம் முழுவதுமாக நிறைவு செய்து விட்டோம். முதல் தளம் கான்கிரீட் வேலைகள் மட்டுமே நிறைவடைந்துள்ளது. முதல் தளத்தின் மீதி வேலைகளை நன்கொடைகள் வந்த பிறகு நிறைவு செய்யலாம் என நினைத்தோம். ஆனால் நல்ல மேஸ்திரி, கிரேனைட் போடுபவர் என குழுவாக அமைவது கடினம். மேலும் இன்னொரு முறை மணல், ஜல்லி, சிமெண்ட் என்று எல்லாவற்றையும் திரும்ப மேலே கொண்டு சென்று வேலை பார்ப்பது என்பது மிகவும் கடினம். ஆதலால் ஒரே முழு மூச்சாக வேலைகளை முடித்து விட்டு நிறைவாக அமர்வது என்று முடிவு எடுத்துள்ளோம். ஆதலால் பகவத் பவனை முழு மூச்சாக முடித்திட நாம் அனைவரும் முடிந்தவரை பங்களிப்பை வழங்கி உதவுமாறு தாழ்மையுடன் கேட்டுக் கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் பவன் இல்ல கட்டடத்திற்கு இதுவரை ஆன செலவுகள் மற்றும் மேற்கொண்டு கட்டடத்தை நிறைவு செய்வதற்கான நிதி தேவைப்பாடு....**

**மொத்த கட்டடத்தின் பரப்பளவு**

| | |
|---|---|
| கீழ்தளம் | – 2600 Sqft. |
| முதல் தளம் | – 2600 Sqft. |
| இரண்டாவது தளம் | – 1000 Sqft. |
| மொத்தம் | – 6200 Sqft. |

மொத்த கட்டட பரப்பளவிற்கான செலவு மதிப்பீடு – 6200 Sqft. X Rs. 1600/- = Rs. 99,20,000/-

**இதுவரை வேலை முடிந்த நிலையில்**

| | | | |
|---|---|---|---|
| கீழ்தளம் | – 2600 X 1600 = 41,60,000/- | @ 95% Complete | = 39,52,000/- |
| முதல் தளம் | – 2600 X 1600 = 41,60,000/- | @ 50% Complete | = 20,80,000/- |
| இரண்டாவது தளம் | – 1000 X 1600 = 16,00,000/- | @ 50% Complete | = 08,00,000/- |

| | | |
|---|---|---|
| மொத்தம் ஆக வேண்டிய செலவு – | | = 68,32,000/- |
| ஆனால் இதுவரை ஆன செலவு | | = 64,50,000/- |
| இதுவரை நன்கொடையாக வந்த தொகை | – 48,55,000/- | |
| வட்டியில்லா கடனாக வாங்கிய தொகை | – 15,95,000/- | |
| மொத்தம் | – 64,50,000/- | |
| இன்னும் முதல் மற்றும் 2ஆம் தளத்தின் வேலைகளை நிறைவு செய்ய தேவைப்படும் தொகை | – 28,50,000/- | |
| **மொத்த தேவைப்பாடு ரூ.** | **– 44,45,000/-** | |
| **உடனடி தேவைப்பாடு ரூ.** | **– 28,50,000/-** | |

(வட்டியில்லா கடனாக வாங்கப்பட்ட தொகையை 2 வருடத்திற்குள் கொடுக்கலாம் என்று சொல்லப்பட்டுள்ளது.)

இதுவரை நன்கொடையாக ரூ.25,000/-மும் அதற்கு மேலும் கொடுத்து தங்களை ஸ்ரீ பகவத் பவன் ஆஸ்ரமத்தின் நிறுவனர்களாக **(Founders)** இணைத்துக் கொண்டவர்கள்...

## ஆத்மஞானி, **தேனிசுவாமி** மற்றும் **சுவாமி ஸ்வரூபானந்தா** இவர்களோடு...

1. திரு. **இராஜகோபால்,** பரமத்தி வேலூர்.
2. திரு. **E.ராமு,** சென்னை.
3. திரு. **சிவகுரு,** கரூர்.
4. திரு. **S.முருகேசன்,** சென்னை,
5. திரு. **மகேந்திரலிங்கம்,** பொள்ளாச்சி.
6. திரு. **தியாகராஜன்,** சென்னை.
7. திரு. **முரளிக்கண்ணன்,** கோவை.
8. திரு. **ஜீவமணி,** சேலம்.
9. திரு. **சரவணன்,** சேலம்.
10. திரு. **இரத்தினசாமி,** திருப்பூர்.
11. திரு. **குணாலன்,** கோவை.
12. திரு. **வெங்கட்ராஜ்,** சேலம்.
13. திரு. **சுகுமார் & லில்லி** குடும்பத்தினர், சென்னை.
14. திரு. Dr. **நாராயணசாமி & செந்தமிழ்செல்வி** சென்னை.
15. திரு. Eng. **முரளி** சென்னை.
16. திருமதி.**வடிவுஅம்மாள் & சம்பந்த** முதலியார்
17. திரு. **முத்துச்செல்வன்,** காஞ்சிபுரம்.
18. திரு. **S.கதிர்வேலவன்,** சென்னை.
19. திருமதி. **சிவசங்கரி,** சென்னை.
20. திரு. **ரவிச்சந்திரன்,** வெஸ்ட் மாம்பலம், சென்னை
21. திருமதி. Dr. **விஜயலட்சுமி,** சென்னை
22. திரு. **S.பாலமுருகன்,** USA
23. திரு. **செந்தில்,** தர்மபுரி.
24. திரு. **சரவணன்-முத்துலட்சுமி,** குடும்பத்தினர், சென்னை.
25. திரு. **புலியூர் உடையான்,** சென்னை.
26. திரு. **சரவணன்,** புரசைவாக்கம்.
27. திரு. **சந்திரசேகர்,** வலசரவாக்கம்.
28. திரு. **வெங்கடேஸ்வரராவ்-சிந்தாநிலாதேவி,** பாண்டி.
29. திரு. **மாரிமுத்து,** சென்னை.
30. திரு. **சந்திரசேகர்** & சகோதரர் திரு. **திருமூர்த்தி**
31. திரு. **தேவா ஸ்ரீராம் & தேவாஸ்ரம்** வெள்ளாளப்பட்டி.
32. திரு. **அப்துல் சாகுல் ஹமீது** நாகர்கோயில்
33. திரு. **வேலுசாமி** பெங்களூரு.
34. திரு. **சுரேஷ்குமார்** சேலம்.
35. திருமதி. **S. லட்சுமி லாவண்யா** சேலம்.
36. செல்வி. **S. வைஷ்னவி** சேலம்.
38. திரு. **முத்துச் செல்வன்** நாகப்பட்டிணம்.
39. திரு. **கார்த்திகேயன்** மற்றும் **குடும்பத்தினர்** சிங்கப்பூர்
40. திரு. **ரவிச்சந்திரன்** பொள்ளாச்சி.
41. திரு. **செந்தில்** (Nigeria) சென்னை.
42. திரு. **ஜெயராமன்** கனடா.
43. திரு. **பாபுலால்** பெங்களூரு.
44. திருமதி. **ஹேமா** அமெரிக்கா.
45. திரு. Dr.**ராஜசேகர்** திருச்சி.
46. திரு. **வேலுமணி** பெருந்துறை.
47. திரு. **உமர் பரூக்** கம்பம், தேனி.
48. திரு. **M.ராஜகோபாலன்** ( கோவை மாருதி பேப்பர் ) பரமத்தி.
49. திரு. **சசிகுமார்** கோவை.
50. திரு. **அன்புசேகர்** நெய்வேலி.
51. திருமதி. **தேவி,** மலேசியா.
52. திரு. **சீத்தல்குமார்,** மயிலாடுதுறை.
53. திரு. **பாலு,** பரமத்திவேலூர்.
54. திரு. **மணிவண்ணன்,** திருச்சி
55. திரு. **ரவிக்குமார்,** நாகபட்டணம்
56. திரு. G. **வெங்கடேஷன்,** மதுரை
57. திரு. **சுந்தரராமன்,** மும்பை
58. திரு. **சின்னம்மாள்,** நெல்லை
59. திரு. **கணேஷ்குமார்,** கோயில்பட்டி
60. திரு. **P.சுந்தரராஜன்,** சென்னை
61. திரு. **சிவக்குமார்,** காங்கேயம்
62. திரு. **ஜோசப் ஜெயராஜ்,** ஹைதராபாத்
63. திரு. **பழனியப்பா பிரபு,** கோவை
64. திரு. **மயில்வாகனம்,** மதுரை
65. திரு. **ரகு,** தர்மபுரி
66. திரு. **நாகராஜன்,** தூத்துக்குடி
67. திரு. **பெரியசாமி,** திருச்சி
68. திரு. **ரவி,** ஆந்திரா
69. திரு. **இராதாகிருஷ்ணன்,** சிங்கப்பூர்
70. திரு. **ஹரிகிருஷ்ணன்,** சென்னை
71. திரு. **ஞானசம்பந்தம்,** சென்னை
72. திரு. M.V. **பாலன்,** காரைக்குடி
73. திரு. சங்கர நாராயணன், கும்பகோணம்
74. ஆடிட்டர். திரு.**ஜெயகோபி** & திருமதி. **பிரேமலதா,** சேலம்
75. திரு. **செந்தில்,** டைலர், திண்டுக்கல்
76. திரு. **நவராஜா,** ஜெர்மனி
77. திரு. Hr. **தேவராஜன்,** சேலம்
78. ஜோதிடர். **ஆறுமுகம் தியாகராஜன்,** செகன்ராபாத்
79. திரு. **ரவி,** சென்னை
80. திரு. K.S. **இராமமூர்த்தி** & திருமதி **விஜயகுமாரி,** சென்னை
81. திரு. **வெங்கட்டராமன்,** (டீக்கடை) மறைமலை நகர், சென்னை.
82. திரு. **சிவச்சந்திரன்** & திருமதி. **சாந்தி** குடும்பத்தினர், சென்னை.
83. திரு. **G.பாலசுந்தரம்,** சென்னை
84. திரு. **சுந்தர் விபாகரன்,** சென்னை
85. திரு. **விஜயலிங்கம்,** சென்னை
86. திரு. Dr.**கார்த்திக்,** திருக்கழுக்குன்றம்
87. திரு. **நந்தகுமார்,** T.நகர், சென்னை
88. திரு. **K.R.யுகேஷ்குமார்,** சென்னை
89. திரு. **சரவணன் அங்கப்பன்,** பெங்களூர்
90. திரு. **இராஜசேகர்,** பெங்களூர்
91. திரு. **பாண்டி பரமசிவம்,** சென்னை
92. திரு. **துரைசாமி,** M.O.C சேலம்
93. திரு. A.P. **வேலாயுதம் & சந்திரகலா** குடும்பத்தினர், சேலம்
94. திரு. **சுதாகர்,** திருச்சி
95. திரு. **சவுந்தரராஜன்,** Sri Ram Chitfunds சென்னை
96. திரு. **ஆனந்தகுமார்,** ஆணைக்கட்டி, கோவை
97. திரு. Eng. **நந்தகுமார்,** சேலம்
98. திரு. **R.அனிஸ்குமார்,** கோவை
99. திரு. **சீனிவாச பிரசாத்,** பேங்களூர்
100. திரு. **கோபி கார்த்திகேயன்,** Advocate, திருவண்ணாமலை.

101. திரு. ஜோதிடர். **இரமேஷ் ராஜகோபால்,** சென்னை.
102. திரு. **கணேசன்,** குடும்பத்தினர், சென்னை.
103. திரு. **ஜெயச்சந்திரன்,** பெங்களூரு.
104. திரு. **T.சிவக்குமார்,** நாகப்பட்டணம்.
105. திரு. **சீதாராமன்,** பெரம்பூர், சென்னை.
106. திரு. **தேவராஜ்,** பெரம்பூர், சென்னை.
107. திரு. **ஸ்ரீகாந்த் & உஷா,** மாங்காடு சென்னை.
108. திரு. **சங்கர்,** வெஸ்ட் மாம்பலம்.
109. திரு. **ரவிசங்கர்,** சேலம்.
110. திரு. **முருகேசன்,** இராசிபுரம்.
111. திரு. **மூர்த்தி,** ( குரு ஊறுகாய் ) நெல்லை.
112. திரு. **நவநீதம்,** நாகப்பட்டணம்.
113. திரு. **அருணாச்சல சாந்தி,** நெல்ல.
114. திரு. **ரகுராம்,** சென்னை.
115. திரு. **G.S.மணி,** சென்னை.
116. திரு. **ஸ்ரீனிவாசன்,** சென்னை.
117. திரு. **விபுலானந்தன்,** சென்னை.
118. திருமதி. **அபிராமி,** சென்னை.
119. திரு. **A.T.சக்திவேல்,** சேலம்.
120. திரு. **சங்கரி,** கடலூர்.
121. திரு. **சேனாதிபதி,** ஒட்டன்சத்திரம்.
122. திரு. **ரமேஷ் ராமநாதன்,** பேங்களூர்.
123. திரு. **மனோகர் ராஜா,** சேலம்.
124. திரு. **S.இராஜசேகர்,** நெல்லை.
125. திரு. **ஸ்ரீனிவாசன்,** அரும்பாக்கம், சென்னை.
126. திரு. **சித்தார்தன்,** சென்னை.
127. திருமதி. **பிரேம் சங்கீதா,** பேங்களூர்.
128. திரு. **P.பாஸ்கர்,** M/s. Marktech Industries, Mumbai.
129. திரு. **முகமது அப்துல் காதர்,** நெய்வேலி.
130. திரு. **வசந்த்,** திருச்சி.
131. திரு. **K.சேகர் & பெரியசாமி,** பாலாஜி எக்ஸ்போர்ட், சேலம்.
132. திரு. **வெங்கடேஷ்,** இளம்பிள்ளை.
133. திரு. **குணசேகரன்,** ஆடிட்டர், சேலம்.
134. திரு. **கோபால்,** (A.B. Plaid) பெங்களூரு.
135. திரு. **சண்முகம்,** சேலம்.
136. திரு. **ஸ்ரீனிவாசன் சேதுராமன்,** சென்னை.
137. திரு. **சாமி ஐயா,** செங்கோட்டை.
138. திரு. **கோவிந்தராஜன்,** சென்னை.
139. திரு. **கல்யாண சுந்தரம்,** சென்னை.
140. திரு. **மாரிசெட்டியார்,** சேலம்.
141. திரு. Dr.**அருளானந்தம்,** தாராபுரம்.
142. திருமதி. **சாந்தி,** நாகப்பட்டிணம்.
143. திரு.**V.J.சிவக்குமார்,** சேலம்.
144. திரு. **கோதண்டபாணி,** குன்னூர்.
145. திருமதி. **ராதா அம்மாள்,** சிங்கப்பூர்.

## நன்கொடைகளை வழங்க....

1. **HDFC BANK- SRI BAGAVATH MISSION A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590**
2. **STATE BANK OF INDIA - SRI BAGAVATH MISSION A/c No. 31784345329, NEFT IFSC: SBIN 0012772**

என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/C ல் நேரடியாக செலுத்தியவர்கள் 97891 65555 என்ற கைப்பேசிக்கு தகவல் தெரிவிக்க அன்புடன் வேண்டுகிறோம்.



ஆத்மஞானி தேனிசுவாமி அவர்கள் ஸ்ரீ பகவத் பவனை திறந்து வைக்கம் போது
உடன் ஸ்ரீ பகவத் ஐயா மற்றும் சொரூபானந்த சுவாமிகள்



# ஸ்ரீ பகவத் பவன் திறப்பு விழா நிகழ்வுகள்




பகவத் ஐயாவிடம் நன்கொடை வழங்கும் போது




ஹீலர் உமர் பாரூக் உரையின் போது



இன்ஜனியர் நந்தகுமார் அவர்களை கௌரவிக்கும் போது



டிசைனர் பிரகாஷ் அவர்களை கௌரவிக்கும் போது

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் “பகவத் பாதை” தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

பகவத் பாதை மாத இதழுக்கு சந்தா செலுத்த விரும்புபவர்கள் கீழ்காணும் ஏதேனும் ஒரு வழியில் செலுத்தலாம்.

**ஓர் ஆண்டு சந்தா – ரூ.100/–** **ஐந்தாண்டு சந்தா – ரூ. 500/–** **ஆயுள் சந்தா – ரூ, 1000/–**

சந்தாத் தொகையை **"Sri Bagavath Mission"** என்ற பெயரில் **M.O.** அல்லது சேலத்தில் செல்லத் தக்க **D.D. (or) Cheque** மூலம் அனுப்பலாம்.

**www.pravaagam.org** என்ற இணைய தளத்தில் **Credit Card / Debit Card** மூலமாகவும் சந்தா செலுத்தலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் **HDFC Bank- Sri Bagavath Mission**

**A/c No. 15907620000075, NEFT IFSC: HDFC 0001590** என்ற கணக்கில் செலுத்தலாம்.

**Bank A/C** ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 92620 61838 என்ற எண்ணிற்கு **SMS** மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.



ஜென் கதை

# தலையில் சுமக்காதே....

எப்பொழுது பார்த்தாலும் பிரச்சினைகள், சிக்கல்கள்... வாழ்க்கையில் நிம்மதியைத் தொலைத்த ஓர் இளைஞன் விரக்தியுடன் ஒரு ஞானியிடம் வந்தான்.

ஐயா, ஒவ்வொரு நாளும் ஏதேனும் ஒரு பிரச்சினை. காலையில் நிம்மதியாக எழுந்தோம், வேலைகளைக் கவனித்தோம், நிம்மதியாக படுத்தோம் என்கிற நிலைமையே எனக்கு இல்லை. என்ன செய்வது? என்று கேட்டான்.

ஞானி அந்த இளைஞன் முகத்தை ஒரு விநாடி கூர்மையாகப் பார்த்தார். பிறகு கூறினார், "உன் பேச்சிலிருந்து பிரச்சனைகளைத் தவறான முறையில் அணுகுகிறாய் என்று நினைக்கிறேன்."

"புரியும் படி சொல்லுங்கள் ஐயா" என்றான்.

"என் அறையில் சிறிய கூழாங்கல் ஒன்று இருக்கும். அதை எடுத்து வா" என்றார் ஞானி.

இளைஞன் எடுத்து வந்தான்.

"இந்த சிறிய கூழாங்கல்லை உன் கண்ணுக்கு மிக அருகில் வைத்து பார்." என்றார் ஞானி.

இளைஞன் அவர் சொன்னது போல் செய்தான்.

"இப்பொழுது கூழாங்கல் எப்படித் தெரிகிறது?" என்றார்.

"பார்வையை மறைக்கும் அளவிற்குப் பெரியதாகத் தெரிகிறது" என்றான்.

"சரி கண்ணுக்குச் சற்று தொலைவில் வைத்துப் பார். எப்படித் தெரிகிறது?" என்று கேட்டார் ஞானி.

"கூழாங்கல் மிகச் சிறியதாக தெரிகிறது" என்றான்.

"பிரச்சினைகளைக் கையாளும் விதமும் இப்படித் தான் இருக்க வேண்டும்." என்றார் ஞானி.

ஞானியின் பதிலில் இளைஞன் திருப்தி அடையவில்லை. ஐயா கூழாங்கல்லை காட்டி புரிய வைத்தது எனது கண்கள் மூலம் தெரிந்து கொள்ள முடிகிறது. ஆனால் எனக்கு மனதில் தான் பிரச்சினை அதை தான் எதிர்கொள்ள முடியவில்லை.

பிரச்சினைகளை நீ தலையில் சுமப்பதனால் உன்னால் எதிர்கொள்ள முடியவில்லை என்றார் ஞானி.

தலையில் சுமப்பது என்றால் என்ன என்றான் இளைஞன்.

"பிரச்சினையையும், உன்னையும் பிரித்துப் பார்க்கத் தெரியாமல் இருப்பதைத் தான் தலையில் சுமப்பது" என்றார் ஞானி.

"எப்படித்தான் பிரச்சனையை எதிர்கொள்வது?" என்றான் இளைஞன்.

"முதலில் உன்னையும், பிரச்சனையையும் தனித் தனியாக பிரித்துப் பார்த்து புரிந்துகொள். அதன் பிறகு தான் பிரச்சினைகளை உன்னால் எதிர்கொள்ளவே முடியும்.

மனப் பிரச்சினைக்கு உன் மனதை எதிர்த்துப் போராடாதே. எதிர்த்து போராடுவது தான் சுமப்பதாகும்.

அந்தப் பிரச்சினைக்கு உன்னால் எவ்வளவு முழுமையாக செயல்பட முடியுமோ அவ்வளவு முழுமையாக செயல்படு. இது ஒன்றே தீர்வு" என்றார் ஞானி.

தன்னுடைய நிலையை உணர்ந்து தனக்குப் புரியும்படி மிக எளிதாக எடுத்துக் கூறிய ஞானியை எண்ணி வியந்தான் இளைஞன்.

**"எந்தப் பிரச்சினையையும் தலையில் சுமக்காது நீ சந்திக்கும் பிரச்சனைக்கு செயல் வடிவமாக முழுமையாக என்ன செய்ய முடியுமோ அதை செய்"** என்றார் ஞானி.

கலங்கிய மனதுடன் வந்த இளைஞன் தெளிந்து தெளிவுடன் திரும்பினான்.

**எந்தப் பிரச்சினையையும் தலையில் சுமக்காதே.**


ஸ்ரீ பகவத் பவனில்
மரக்கன்று நடும் போது


வாக்கிங் செல்லும் வழியில்
சற்று ஓய்வு


நிறைவு பெறாத இரண்டாம் தளத்தில்
பகவத் பாதைக்கான கட்டுரையை
நிறைவு செய்த போது


ஸ்ரீ பகவத் பவனின் உச்சியில்


திருவருட்சோலை மலை உச்சிக்கு போகும் வழியில்



திருவருட்சோலை மலை உச்சியில்

**Registration Number of the News Paper TNTAM/2014/57698 Postal Registration Number : TN/WR/SLM(E)/22/2015-2017**

Published by Shri. V. A. P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission, 31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu, India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K. S. Jeevamani, Cell : 97891-65555